# ஸ்ரீராமாநுஜன் 124, 125

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக

மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 11 | 1959ஸு ஏப்ரல் & மேமீ<br>விகாரிஸு சித்திரை, வைகாசிமீ | மலர் 4, 5 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—16.

வைகுந்தன் வந்து கலந்ததற்பின் வாழ்மாறன்
செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து—நைகின்ற
தன்மைதனைக் கண்டுன்னைத் தான்விடே னென்றுரைக்க
வன்மை யடைந்தான் கேசவன்.

| | |
|---|---|
| வைகுந்தன் | பரமபத நாதனான எம்பெருமான் |
| வந்து கலந்த தற்பின் | வந்து (தம்முடன்) கலந்த பிறகு |
| வாழ் | ஸத்தை பெற்ற |
| மாறன் தான் | ஆழ்வார் |
| செய்கின்ற | செய்கிற |
| நைச்சியத்தை | நைச்யாநுஸந்தானத்தைக் குறித்து |
| சிந்தித்து | (எம்பெருமான்) விசாரமடைந்து |
| நைகின்ற தன்மைதனை கண்டு | சிதிலமாகிறபடியைப் பார்த்து |
| உன்னை விடேன் என்று உரைக்க | 'உன்னை நான் விட மாட்டேன் (ஆதலால் கவலைப்படவேண்டா)' என்று தெரிவிக்க |
| கேசவன் | எம்பெருமான் |
| வன்மை அடைந்தான் | (கவலை நீங்கி) நிலைபெற்று நின்றான். |

* * * ஆடியாடி யென்கிற திருவாய் மொழியிலே பட்ட வ்யஸநம் தீர அந்தாமத்தன்பில் எம்பெருமான் வந்து ஸம்ச்லேஷிக்க அதனால் துயர் தீர்ந்து எல்லை கடந்த மகிழ்ச்சியை அநுபவியா நின்ற ஆழ்வார் "அல்லாவி" என்றும் "என் முடிவு காணாதே" என்றும் நைச்யாநுஸந்தாநப்ரஸக்தி பண்ண, அது கண்ட எம்பெருமான் 'இவர் நம்மை விட்டு அகன்றுபோவர்போலிருக்கிறதே!'

என்று அதிசங்கை கொள்ள, அஃதறிந்த ஆழ்வார் 'பிரானே!' உன்னை யொரு நாளும் விடமாட்டேன்' என்று உறுதியாகக் கூற அது கேட்டு எம்பெருமான் கவலை தீர்ந்தானானன் என்றதாயிற்று.

ஆடியாடி யென்னும் திருவாய்மொழியில் ஆழ்வார்பட்ட ஆர்த்தியெல்லாம் தீர எம்பெருமான்வந்து ஸம்ச்லேஷித்தமை கீழ்த்திருவாய்மொழியில் சொல்லிற்று. அந்த ஸம்ச்லேஷத்தினால் எம்பெருமான் அளவுகடந்த த்ருப்தியை யடைந்தவனாய் 'இவ்வாழ்வார்க்கு என்னவுதவி செய்வேன் நான்!, இவர்க்கு என்ன கொடுப்பேன்!' என்று தடுமாறி நிற்பவனாய், இவ்வாழ்வார் நைச்சியாநு ஸந்தானம் பண்ணி 'இப் பரமபுருஷனையா நாம் அணுகுவது? நம்மால் இவனுக்கு நிறக்கேடு உண்டாகுமே! அஃது உண்டாகலாமோ? நாம் இவனைவிட்டு ஒதுங்கி நிற்பதே நன்று' என்று நினைத்து ஒருகால் அகன்று போய்விடுவாராயின் அலப்யலாபமான இதனை நாம் இழந்துவிடுவோமே! இவ்வாழ்வார்க்கும் நமக்கு முண்டான இக்கலவி நித்யமாயிருக்க வேணுமே' என்று அதிசங்கை கொண்டிருக்கையில், அதைத் தெரிந்துகொண்ட ஆழ்வார் 'பிரானே! நீ இங்ஙனம் அதிசங்கை கொள்ள வேண்டா; உன்னை நான் பிடித்தபிடி ஸாமாந்யமன்று; இனி ஒருநாளும் உன்னை நான் விடமாட்டேனும்படி திடமாகப் பற்றிக்கொண்டேன் காண்' என்று கூறி எம்பெருமானைத் தேற்றுகிறார் இத்திருவாய் மொழியில். .... (*)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி — 17.

கேசவனா லென்தமர்கள் கீழ்மே லெழுபிறப்பும்
தேசடைந்தா ரென்று சிறந்துரைத்த—வீசுபுகழ்
மாறன் மலரடியே மன்னுயிர்க்கெல்லா முய்கைக்கு
ஆறென்று நெஞ்சே யணை.

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே !. | வீசு புகழ் | எங்கும் பரவிய புகழை யுடையருமான |
| கேசவனால் | 'எம்பெருமானாலே | மாறன் | ஆழ்வாருடைய |
| என் தமர்கள் | என்னைச் சேர்ந்தவர்களான | மலர் அடியே | திருவடித்தாமரைகளே |
| கீழ் மேல் எழு பிறப்பும் | கீழும் மேலுமுண்டான ஸம்பந்தி ஸம்பந்திகள் வரையிலும் | மன் உயிர்க்கு எல்லாம் | நிலைநின்ற ஆத்மாக்களுக்கெல்லாம் |
| தேசு அடைந்தார் என்று | வீறு பெற்றார்கள்' என்று | உய்கைக்கு ஆறு என்று | உஜ்ஜீவநோபாயமென்றுகொண்டு |
| சிறந்து உரைத்த | நன்றாக அருளிச்செய்தவரும் | அணை | (அத்திருவடிகளை) ஆச்ரயிப்பாயாக. |

இருபத்தொரு தலைமுறை யளவாகவுள்ள என்னைச் சேர்ந்தவர்கள் யாவரும் எம்பெருமானாலே விஷயீகரிக்கப் பெற்று வீடு பெற்றார்களாயினர் என்று நன்கு அருளிச்செய்த ஆழ்வாருடைய திருவடிகளே யாவர்க்கும் உய்வுபாயம் என்றதாயிற்று. கீழ்த் திருவாய்மொழியில் "எமர் கீழ்மேலெழுபிறப்பும் விடியாவெந்நரகத்து என்றுஞ் சேர்தல் மாறினர்" என்று—எம்பெருமான் தம்மிடத்து வைத்த காதல் முன்னும் பின்னும் வெள்ளங்கோத்தபடியைச் சிறிதளவாக ப்ரஸ்தாவித்தார்; அந்த மஹோபகாரத்தைப் பெருக்கப் பேச வேணுமென்று ஆழ்வார்க்கு அபிநிவேச முண்டாயிற்று. அஃது இத்திருவாய்மொழிக்கு முக்கியமான ப்ரமேயமாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களில் இது வொரு மிகச் சிறந்த குணம்: அதாவது—ஒருவனை விஷயீகரிக்கத் திருவுள்ளம் பற்றினால் அந்த விஷயீகாரம் அவ்வொருத்தனளவிலே நில்லாமல் அவனோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்றாரளவிலும் கொந்தளிக்குமது.

எம்பெருமான் யாரிடத்து அருள் செய்தாலும் அவ்வருளை அவர்களிடத்திலேயே நிறுத்திவிடாமல் அவர்களோடு ஸம்பந்தஸம்பந்தம் பெற்றவர்கள் பக்கலிலும் பெருகச் செய்யுமியல்வினன் என்பதற்குப் பல உதாரணங்களுண்டு.

இத்திருவாய்மொழியில் இவ்விஷயம் முக்கியமாகப் பேசப்படுகிறது. அன்றியும் இத்திருவாய்மொழியில் மற்றொரு விசேஷமுமுண்டு; அதாவது—கேசவன் முதலாகத் தாமோதரனளவாகவுள்ள துவாதச நாமங்களும் பாட்டுத்தோறும வரிசைக்கிரமமாகத் தொடுக்கப்பட்டிருக்கின்றன வென்பதாம். ஆனது பற்றியே, இப்பதிகம் மாத்திரம் மற்றைப் பதிகங்கள்போல் பதினொரு பாசுரங்கள் கொண்டதன்றியே பதின்மூன்று பாசுரங்கள் கொண்டதாயிற்று.

---

## அபூர்வராமாயண மறுபதிப்பு.

அபூர்வராமாயண மென்னும் பெயரால் ஸ்ரீ ராமாயண ஸாரமாக அடியேனெழுதிய நூல் பத்தாண்டுகட்கு முன்பு திருவல்லிக்கேணி ஜகன்மோகினிப் பத்திரிகையில் மாதந்தோறும் வெளிவந்து கொண்டிருந்து பிறகு தனிப்புத்தகமாகவும் பிரசுரமாயிற்று. நாலைந்து வருஷகாலமாகவே அதன் பிரதிகள் கிடைப்பது அரிதாய்விட்டது. அபேக்ஷகர்கள் மலிந்திருக்கிறபடியாலும், அதனை ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே வெளியிட்டு உபகரிக்க வேணுமென்று பலர் கேட்டுக்

கொண்டபடியாலும் அஃது இப்போது இதில் வெளியிடலாகிறது. அடுத்த மலரில் இது பூர்த்தியடைந்துவிடும். அப்போது ஒன்று சேர்த்துத் தனிப்புத்தக மாக்கிக் கொள்ளலாம்.

இந்நூலில் ஸ்ரீராமாயண கதைகள் வரிசையாக அமைக்கப்படவில்லை யெனினும் ஸந்தர்ப்பாநு குணமாக ஸகல கதைகளும் இதில் அமைந்துவிட்டன வென்பதை வாசகர்கள் எளிதில் அறிவர்கள். நாரத மஹர்ஷியை நோக்கி வான்மீகிமுனிவர் பதினாறு திருக்குணங்களை யெடுத்துரைத்து இக்குணங்களை யுடையவொரு நரோத்தமனைச் சொல்லவேணுமென்று வினவியதாக ஸ்ரீராமா யணம் அவதரித்துள்ளது. அந்தப் பதினாறு திருக்குணங்களையும் இராமபிரா னிடத்தில் ஸமந்வயப்படுத்தி இன்ன கதையினால் இன்ன திருக்குணம் வெளி யாயிற்றென்று விளக்கி யிருப்பதோடு ஸ்ரீராமாயண கதைகளில் தோன்றும் பல வகையான ஆக்ஷேபங்களும் அவற்றின் பரிஹாரங்களும் நம் பூருவாசாரியர்கள் ஆங்காங்கு நிரூபித்திருப்பவற்றை யநுசரித்து விவரிக்கப்பட்டிருப்பதும் இந் நூலுக்கு விசேஷம்.

இந்நூல் வெகுவிரிவாக அமையவேண்டியிருந்தும் அது சுவைக் கேடா மென்று நினைத்தே ஸாரஸம்க்ஷேப ரூபமாக அமைக்கப்பட்டது. இதனை ஒவ் வொருவரும் ஒரேநாளில் வாசித்து முடிக்க வேணுமென்பது நமது அவா. ஸ்ரீராமாயணோபந்யாஸகர்கள் பலர் இந்நூலினால் பெரிதும் உதவி பெறுவதாக முனமுவந்து பலகால் தெரிவித்துள்ளார்கள். .... ... (*)

---

## திவ்யதேச மஹோத்ஸவங்கள்.

ஸகல திவ்ய தேசங்களிலும், விசேஷித்து ஸ்ரீபெரும்பூதூரிலும் எம்பெரு மானாருடைய திருநக்ஷத்ர மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடைபெற்று முடிந் தது. அடுத்த நாளிலேயே நம்மாழ்வாருடைய மஹோத்ஸவம் தொடக்கமாகி எங் கும் நடைபெற்று வருகின்றது. 19–5–59 செவ்வாய்க்கிழமையன்று ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாளுடைய வையங்கண்ட வைகாசித்திருநாள் த்வஜாரோஹணம். 21–5–59 வியாழக்கிழமை பெரிய திருவடி ஸேவை 25–5–59 திங்கட்கிழமை திருத்தேர். 22–5–59 வெள்ளிக்கிழமை நம்மாழ்வார் சாத்துமுறை.

---

|| श्रीः ||

श्रीमते रामानुजाय नमः । श्रीमद्वरवरमुनये नमः ।

# பட்டர் ஸ்ரீஸூக்தி பரிஷ்காரம்

ஸ்ரீ காஞ்சீ ஸ்ரீ அண்ணங்கராசாரியர்

——(०)——

श्रीपराशरभट्टार्यकृतौ श्रीरङ्गराट्स्तवे । विशुद्धपाठस्वारस्यं विबोधयितुमुत्सहे ॥

* आघ्रायैश्वरगन्धश्लोके महिमस्वभाव इति पाठः ।

साधुरिति मन्यमानान् साधून् प्रणिपत्य साधु बहु वच्मि ॥

## முன்னுரை

ஸ்தோத்ரரத்நம் தொடக்கமாக நக்ஷத்ரமாலிகாந்தமான ஸகல ஸ்தோத்ரங்களையும் அடியேன் ஏடு பார்த்துச் சிந்தனை செய்யாமல் திவ்ய ப்ரபந்த வேதங்களைப்போல இளமையிலேயே குருமுகமாக க்ரஹித்தேன். ஏறக்குறைய இரண்டாயிரம் ச்லோகங்களுக்குமேல் திருத்தகப்பனார் திருவடிவாரத்தில் கசடறக் கற்றேன். மிக்க இளமையில் கற்றதனால் சில பல சொற் பிறழ்வுகள் நேர்ந்திருக்கவுங்கூடும். விவேக தசை விளைந்த பின்பு மிகமிக ஆராய்ச்சிகள் செய்தும் வல்லார் வாய்க் கேட்டும் திருத்திக் கொள்ளவும் பெற்றேன். பஞ்சஸ்தவ ஸ்ரீரங்கராஜஸ்தவாதிகளான ஸ்தோத்ரங்கள் விசேஷமாக ப்ரசாரத்திலில்லாதவையாதலால் இவற்றில் சொற்பிழைகள் புகுந்திருப்பது வியப்பன்று.

திருவல்லிக்கேணியில் ஆனந்தா அச்சுக்கூடத்தில் ஸ்ரீபாஷ்ய கீதா பாஷ்யாதிகளான உத்தம க்ரந்தங்கள் வெகு நேர்த்தியாக அச்சிடப்பட்டபோது தெலுங்கு லிபியில் **ஸ்தோத்ரார்ணவ**மென்று பெயரிட்டு ஸகல ஸ்தோத்ரங்களையும் நான்கு தரங்கங்களாக வெளியிட்டார்கள். அவற்றுள் பூர்வாசார்ய ஸ்தவங்கள் ஒரு தரங்கத்தில் அடங்கியிருக்கின்றன. திருவல்லிக்கேணியில் சிறந்த வித்வானும் விமர்ச குசலராயுமெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் அத்தங்கி கவிபூஷண குமாரதாதாசார்ய ஸ்வாமிகளால் அவை சோதிக்கப்பட்டன. ஸ்ரீ உ. வே. வியாகரண வித்வந்மணியான அ. வீ. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியும் ஸஹாய சோதகராக இருந்து வந்தார். அவ்விருவராலும் சோதிக்கப்பட்ட அப்பதிப்பிலும் பல பிழைகள் புகுந்துவிட்டன. ஒரு ஸமயம் அடியேன் அவற்றைப் பராமர்சிக்க நேர்ந்தபோது அவ்விருவர் ஸந்நிதியிலும் அப்பிழைகளையெடுத்துக்காட்ட நேர்ந்தது. விஜ்ஞாபித்த உபபத்திகளினால் அவை பிழைகளேயென்று அவர்களும் இசையும்படியாயிற்று.

பிறகு அடியேன் திவ்ய ப்ரபந்தங்களுக்கெல்லாம் திவ்யார்த்த தீபிகையுரை யெழுதினது போலவே ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் [பெரியவை சிறியவை என்கிறவாசியில்லாமல் எல்லாவற்றுக்கும்] மணிப்ரவாள வியாக்கியான மெழுதினபோது, பிழைபட்ட பாடங்களை யெல்லாம் திருத்தி உபபத்தி விவரணத்தோடுங்கூட சுத்தபாடங்களைப் பதிப்பித்திருக்கிறேன். ஸமய விசேஷங்களில் அவற்றை நோக்கும் மஹான்கள் அடியேனுடைய பரிச்ரமத்தில் உகப்புக் காட்டிவருகிறார்கள். சோதிக்க வேண்டியவை யெல்லாவற்றையும் சோதித்தாய்விட்டதென்று அடியேன் ப்ரதிஜ்ஞை செய்யகில்லேன். இன்னமும் சோதிக்க வேண்டியவை பல இருக்கலாம். இதுகாறும் சோதிக்கப்பட்டவைகளில் மிக முக்கியமானவற்றை [ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலிருந்து] ஈண்டெடுத்துக் காட்டுகிறேன். அடியேனுடைய வியாக்கியானங்களில் தேடிப்பார்க்க வேண்டிய அருமையைப் போக்குதல் இதற்கு முக்கியமான ப்ரயோஜனம். உபபத்திகளை நன்றாக விளக்குதல் இங்கு விசேஷம். விமர்சகுசலர்களுக்கு இது மிகப் பெரிய விருந்து என்பது அடியேனுடைய அபிஸந்தி. *

**முன்னுரை முற்றும்**

---

## 1. நமஉக்திம் அதீமஹே

ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தின் முதல் ச்லோகம் * **ஸ்ரீவத்ஸசிஹ்நமிச்ரேப்ய :** * என்பது. இதில் இரண்டாவது பாதம் 'நமஉக்தி மதீமஹே' என்பது. இங்கு **அதீமஹி** என்றே பல பெரியார்களும் சொல்லிவருகிறார்கள். இது ஆழ்வானுடைய தனியனாதலால் ஸ்ரீவைஷ்ணவ வுலகமெல்லாம் அநுஸந்திக்கும் ச்லோகமிது. எங்கும் எவரும் **அதீமஹி** என்றே பெரும்பாலும் அநுஸந்தித்துவரக் காதில் விழுகிறது. அடியேனுக்குத் திருத் தகப்பனார் **அதீமஹே** என்று கற்பித்தார். இந்த ச்லோகம் தேவப்பெருமாள் ஸந்நிதியில் பலகாலும் குழாங்கூடி அநுஸந்திக்கப் படுவதாதலால் கோஷ்டியில் யாவரும் **அதீமஹி** என்றே அநுஸந்திக்கக் கேட்டிருந்த வடியேன் 'அந்த பாடம் தவறு ?' என்று கேட்டதற்கு, திருத்தகப்பனார் ஸாதித்ததாவது,

> ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்திலேயே * அங்கைரஹம்ப்ரதமிகாசரிதேத்யாதி (71 - ஆம்) ச்லோகத்தில் * நூதநதாயமாந சாகாசதம் கதமதீமஹி ரங்கதுர்யம் * என்றவிடத்தில் **அதீமஹி** யென்கிற ப்ரயோகம் நிஸ்ஸந்தேஹமாகக் காண்பதனால் அதைத் தவறென்று சொல்ல முடியாது; ஆனாலும் அதைச் சிறிது சிரமப்பட்டு நிர்வஹிக்கவேணும்; அதீமஹே என்பது அநாயாஸமாக ஸித்திக்கும் ரூபமாகையாலே இங்கு இப்பாடமே யுக்தமாகும்; இப்படியே அநுஸந்தித்துவரத்தகும்—என்று.

அப்போது அடியேனுக்கு ஆயாஸம் அநாயாஸம் என்பதில் தெளிவு

பிறக்கவில்லை. மேலே முன்னுரையில் ப்ரஸ்தாவித்த திருவல்லிக்கேணி அத்தங்கி ஸ்வாமியோடு வார்த்தையாடுகையில் அந்த ஸ்வாமி (அதீமஹி) என்கிற பாடம் ஸர்வாத்மநா அஸாதுவென்றும், (அதீமஹே) என்பது தான் யுக்தமென்றும் ஸாதித்தார். அப்போது "........... சாகாசதம் க்தமதீமஹி ரங்க தூர்யம்" என்கிற ச்லோகத்தைக் கொண்டு அடியேன் அதீமஹி யென்பது அஸாதுவாக வழியில்லையே யென்று விஜ்ஞாபித்தேன். அதற்கு அந்த ஸ்வாமி "கதமதீமஹி" என்பது இடையில் ஏற்பட்ட தவறான பாடமென்றும் (ஹ்ருதி ததீமஹி) என்றே ஏடுகளில் காண்கிற பாடமென்றும் ஸாதித்து (ஹ்ருதி ததீமஹி) என்றே தாம் பதிப்பித்திருப்பதையும் காட்டினார். அந்த ஸ்வாமி நல்ல நிரூபகராகையாலும், (ஹ்ருதி ததீமஹி) என்று பாடமுள்ள ஏட்டுப் பிரதியையும் காட்டினபடியாலும் திருத்தகப்பனாரிடம் அடியேன் கேட்டிருந்ததில் சிரத்தை குலைந்து (அதீமஹி) என்கிற ரூபம் ஸர்வாத்மநா அஸாதுவென்றே கொண்டேன். அக் கொள்கையை அடியேனுடைய வியாக்கியானங்களிலும் வெளியிட்டிருக்கிறேன்.

பிறகு ஸ்ரீரங்கராஜஸ்தவத்திற்கு வியாக்கியான மெழுதி வருகையில் (ச்லோ. 71-ல்) "**ஹ்ருதி ததீமஹி**" என்கிற பாடத்தை வைத்து உரை செய்யப் பார்த்தபோது அந்த பாடம் சிறிதும் இணங்கிவரவில்லை. அங்கு **கதம்** என்னு மவ்யயம் இருந்தாலொழிய வக்தாவின் விவக்ஷை பொருந்தமாட்டாதென்று மனத்தில் பட்டது. ஆகவே, **கதமதீமஹி** என்றுதான் பட்டர் திருவாக்கில் வந்த பாடமென்றும், ஏடுகளில் (**ஹ்ருதி ததீமஹி**) என்று காண்கிற பாடம் "அதீமஹி என்பது அஸாது" என்று கொண்டவர்கள் திருத்தி யெழுதினதாயிருக்குமென்றும் எண்ணினேன்.

## அதீமஹி என்கிற ரூபத்தின் பொருத்தம்

அதீமஹே என்னும் ரூபத்தைப்பற்றி விசாரமில்லை. லட்டில் உத்தம புருஷ பஹுவசந ரூபமாகத் தேறுமிது. அத்யயநம் பண்ணுகிறோம் (அதாவது) வாயால் உச்சரிக்கிறோம் என்றபடி. (அதீமஹி) என்கிற ரூபத்தை ஆசீர்லிங் உத்தமபுருஷ பஹுவசந ரூபமாகக் கொள்ளவேணும். கொள்ளுமளவில் (அதீயீமஹி) என்று ரூபம் ஸித்திக்குமேயொழிய (அதீமஹி) என்று ஸித்திக்க வழியில்லையே யென்று சிந்திக்கநேரும். இங்குத் தெரிந்து கொள்ளவேண்டிய ; நுட்பமொன்றுண்டு. "**ஆகம சாஸ்த்ரமநித்யம்**" என்றொரு வியாகரண பரிபாஷையுண்டு. அதன்படி (அதீமஹி) என்கிற ரூபம் தேறும். பரிபாஷேந்து சேகரத்தில் இந்த பரிபாஷையும் இது போன்ற வேறு சில பரிபாஷைகளும் எடுத்துக் கழிக்கப்பட்டுள்ளன. "**தந்ந ; பாஷ்யே அதர்சநாத்**" என்பது அவ்விடத்துப் பங்க்தி. "மஹாபாஷ்யத்தில் காணப்படாமையினல்' என்று காரணஞ் சொல்லிச் சில பரிபாஷைகள் கழிக்கப்பட்டன. எந்த சாஸ்திரத்திலும் ப்ராசீநபக்ஷம், நவீநபக்ஷம் என்று இரண்டு பக்ஷங்

கள் சொல்லிப் போருவதுண்டு. ப்ரக்ருதவிஷயத்திலும் நவீநபக்ஷத்தில் *ஆகம சாஸ்த்ரமநித்யமித்யாதி பரிபாஷைகள் தள்ளுண்டபோதிலும் ப்ராசீநபக்ஷத்தில் அவை ப்ராமாணிகங்களாகத் தெரியவருகின்றது. கூரத்தாழ்வான் பட்டர் முதலான நம் ஆசாரியர்கள் அந்த பரிபாஷைகளை இசைந்தே பல ப்ரயோகங்கள் செய்தருளியுள்ளார்கள். இதைச் சிறிது விவரிப்போம்.

கூரத்தாழ்வான் அதிமாநுஷ ஸ்தவத்தில் "अब्धिं न तेरिथ न जिग्यिथ राक्षसेन्द्रम्—அப்திம் ந தேரித ந ஜிக்யித ராக்ஷஸேந்த்ரம்" என்றார்; பட்டர் ஸ்ரீ ரங்க ராஜஸ்தவத்தில் "मनुजसमयं कृत्वा नाथावतेरिथ पद्मया—மநுஜஸமயம் க்ருத்வா நாதாவதேரித பத்மயா" என்றார். இவற்றைக் காணும்போது "तॄ-प्लवनतरणयोः" என்கிற தாதுவில் லிட்டில் மத்யம புருஷைகவசநரூபம் तेरिथ (தேரித) என்றே தேறுமென்பது நிர்ணயிக்கப்படுகிறது. அதிமாநுஷ ஸ்தவத்தில் இங்ஙனே பிரயோகித்தருளின ஆழ்வான்தாமே வரதராஜஸ்தவத்தில் "अवततर्थ पार्थादिकम्" (**அவததர்த்த** பார்த்தாதிகம்) என்றும் ப்ரயோகித்திருக்கக் காண்கிறோம். **தேரித, ததர்த்த** என்று இரண்டு ரூபங்களும் உண்டென்று கொள்வதற்கு வழியில்லை; (தேரித) என்றுதானுண்டு. அப்படியிருக்க (**ததர்த்த**) என்று எங்ஙனே ப்ரயோகித்தாரென்னில், மேலே ப்ரஸ்தாவித்த *ஆகமசாஸ்த்ரமநித்யம்" என்கிற பரிபாஷையைத் திருவுள்ளம்பற்றியே ப்ரயோகித்தாரென்று கொள்ளவேணும். வேறு வழியில்லை. (அதீமஹி) என்னும் ப்ரக்ருத விவாத ஸ்தலத்திலும் (அதீயீமஹி) என்னாதது அந்த பரிபாஷையைக் கொண்டேயென்க. "**சாகாசதம் கதமதீமஹி ரங்கதுர்யம்**" என்றவிடத்தில் (அதீமஹே) என்று பாடங்கொள்ள ஔசித்யமில்லாமையாலே அங்கு (அதீமஹி) என்றே படிப்போம். *ஸ்ரீவத்ஸ சிஹ்நமிச்ரேப்யோ நம உக்திமென்றவிடத்தில் (அதீமஹி) என்றே சொல்லியாக வேண்டிய நிர்ப்பந்தமில்லாமையாலே நிர்விவாத ரூபமான (அதீமஹே) என்பதைப் பாடமாகக்கொள்ளலாம். இங்கும் (அதீமஹி) என்றேயிருக்கட்டுமென்னில், தடை செய்வாராருமில்லை.

"**பாஷ்யே அதர்சநாத்**" என்று தள்ளப்படும் பரிபாஷை ***ஆகம சாஸ்த்ரமநித்யம்*** என்பதொன்றேயன்று; *संज्ञापूर्वकविधेरनित्यत्वात्* *गणकार्यमनित्यम्* अनुदात्तेत्त्वलक्षणमात्मनेपदमनित्यम् * नञ्घटितमनित्यम् * என்கிற பரிபாஷைகளும் அந்த ச்ரேணியில் சேர்ந்தவையே. அந்த பரிபாஷைகளை நம் ஆசார்யர்கள் தள்ளாமல் கொண்டிருக்கிறார்களென்பது அவர்களின் பிரயோகங்களினால் நமக்குத் தெரியவருகின்றது. ப்ரக்ருதத்தில் ***ஆகம சாஸ்த்ரமநித்யம்*** என்கிற பரிபாஷை விஷயம்.

## 2. நேதாரம் பகவத்பக்தேர் யாமுநம்...

*விதாய வைதிகம் மார்க்கம்* என்னும் நான்காவது ச்லோகத்தில் "யாமுநம் மநவாமஹே" என்கிற பாடம் பலர் சொல்லக் காதில் விழுகிறது. ஸம்ஸ்க்ருதவ்யாக்யாதா "**மநவாமஹே—த்யாயாம:**" என்றெழுதினதாக அச்சிடப்பட்டுள்ளது. லட்டில் உத்தம புருஷ பஹுவசநமென்று கொண்டார் போலும். லட்டில் (மநுமஹே) என்றாகுமேயொழிய மநவாமஹே என்றாகாது. எந்த லகாரத்திலுமாகாது. லோட்டில் உத்தம புருஷ பஹுவசநரூபம் **மநவாமஹை** என்பது. அது தான் இங்கே ப்ரயுக்தம். அது தான் ஸாதுவாகும். ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதா [**மநவாமஹை**—த்யாயாம.] என்றெழுதியிருப்பரென்றும் ஊஹிக்கலாகிறது.

## 3. ஸ்ரீஸ்தநாபரணம் தேஜ:....சிந்தாமணிமிவோத்வாந்தம்

மேலே * ஸ்ரீஸ்தநாபரணம் தேஜ: ஸ்ரீரங்கேசய மாச்ரயே * என்னும் (8) ச்லோகத்தில் * **சிந்தாமணி மிவோத்பாந்தம்** * என்றே பலரும் ஓதி வருகிறார்கள். ஓராண்வழித் தனியன்களில் இது பெரிய பெருமாளுடைய தனியனாகையாலே ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் இதை யநுஸந்திக்க ப்ராப்தமாயிருக்கின்றது. அனைவரும் **உத்பாந்தம்** என்றே (பெரும்பாலும்) சொல்லிவருகிறார்கள். 'ப்ரகாசிக்கிற' என்று பொருளாகிறபடியாலே இது அஸாதுவான சப்தமென்ன வொண்ணாது. ஆசார்யர்களின் வியாக்கியானத்திற்குச் சேராதாகையாலே இது அநுபாதேயமான பாடம். **உத்வாந்தம்** என்பதே உத்தமமான பாடம். அமலனாதிபிரானுக்கு வியாக்கியான மருளிச்செய்த அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் [ஆசார்ய ஹ்ருதயகாரர்] * ஆலமாமரத்தினிலைமேல் * என்னும் பாசுரத்தில் 'அரவினணையான்' என்றவிடத்து "படுக்கையான இவன் தான் * சிந்தாமணி மிவோத்வாந்தம் * என்கிறபடியே ஜகதுபாதாநமாயிருப்பதொரு **சிந்தாமணியை உமிழ்ந்து,** இத்தை யாரேனுமொருவர் இரிஞ்சிக்கொள்ளில் செய்வதென்? என்று தன்மடியிலே வைத்துக் கரண்டக மிட்டுக்கொண்டு கிடக்கிறாப் போலேயிருக்க." என்றருளிச் செய்திருக்கையாலே **உத்வாந்தம்** என்னும் பாடமேயுள்ளது. உமிழப்பட்ட என்று பொருள்.

## 4. மத்வாக்பிரைச மதிசாயநமாவ்ருணோதி

மேலே * ஸோ அங்க வேத * இத்யாதியான பதினைந்தாவது சுலோகத்தில் நான்காவது பாதம் *மத்வாக்பி ரைச **மதிசாயந** மாவ்ருணோதி * என்பது. இங்கு **அதிசாயநம்** என்னும் பதத்தின் சுவையை யறியாதார் **அதிசாயிநம்** என்று சொல்லி வருகிறார்கள். அச்சுப் புத்தகங்களெல்லாமப்படியே. பாணினி மஹர்ஷி * अतिशायने तमबिष्ठनौ—அதி

சாயநே தமபிஷ்டநௌ* என்று ஸூத்ரமியற்றினர். அந்த ஸௌத்ர நிர்தேசத்தை யடியொற்றிச் செய்தது இந்த ப்ரயோகம். அதிசாயிநம் என்பது அர்த்தமற்றது.

## 5. விஷ்ணு மாய மத்வம்ச்ய ராஜகுல

மேலே *கிந்து ப்ரபத்தி பல தாரிதே த்யாதியான பதினேழாம் ச்லோகத்தில் "விஷ்ணுமாயா மத்வம்ச்ய" என்றே பலர் சொல்லி வருகிறார்கள்; புத்தகங்களிற் பாடமும் அப்படியே. மாயாசப்தம் ஸ்த்ரீ லிங்கமானாலும் அங்கே பஹுவ்ரீஹியாதலால் (மாய) என்று ஹ்ரஸ்வமே யாகும். தீர்க்க மிருந்தால் அந்வயியாது. "தாரித விஷ்ணுமாய மத்வம்ச்ய" என்பதே ஸாதுபாடம்.

## 6. ஸஹஸ்ரஸ்தூணதிநாம்நாதம்

இது ஸாமாந்ய விஷயமன்று; மிகப் பெரிய விஷயம். ஆயிரக்கால் மண்டப விஷயமான *ஸர்வாத்மஸாதாரணே த்யாதியான ச்லோகத்தில் "ஸஹஸ்ரஸ்தூணதி நாம்நா தத் அவாப்நவாநி" என்று வழங்கிவரும் பாடம் பெரும்பிழையுற்றது. பூர்வவ்யாக்யாதாக்களும் இப்படியே வைத்து வியாக்கியானித்திருப்பது ப்ராமாதிகமென்று உபேக்ஷிக்கத்தக்கது. "**ஸஹஸ்ரஸ்தூணதிநா ஆம்நாதம் அவாப்நவாநி**" என்பது சுத்தபாடம். **ஸஹஸ்ரஸ்தூணதிநா**—'ஸஹஸ்ரஸ்தூணே' என்கிற பதத்தை ஆதியிலே உடைத்தான உபநிஷத் வாக்யத்தினால், **ஆம்நாதம்**—ஓதப்பட்டதான, ஆஸ்தானத்தை [ஆயிரக்கால் மண்டபத்தை] அடையக்கடவேன் என்று பொருள். இதற்கு ப்ரமாணங்களிரண்டு காட்டுகிறோம். ரஹஸ்யத்ரயஸார - உபோத்காதாதிகாரத்தில் "கலங்காப் பெருநகரிலே ஸஹஸ்ரஸ்தூணதி வாக்யங்களாலே ஓதப்படுகிற திருமாமணி மண்டபத்திலே" என்றும், ஸ்தோத்ரரத்நத்தில் *தயா ஸஹாஸீநம்* (39) என்னும் ச்லோகத்தின் பாஷ்யத்திலே ***ஸஹஸ்ரஸ்தூணே*** இத்யாதி தவல்கார ச்ருதியை உதாஹரித்து இந்த ச்ருதியை பட்டர் ***ஸர்வாத்மஸாதாரணே** த்யாதி ச்லோகத்தில் எடுத்துக் காட்டியுள்ளார் என்றும் தூப்புல் பிள்ளை பணித்திருக்கக் காண்கிறோம். 'ஸஹஸ்ரஸ்தூணதிநா ஆம்நாதம்' என்று பாடமிருந்தாலொழிய மேலே காட்டின பங்க்திகள் பொருந்தமாட்டா; **ஸஹஸ்ரஸ்தூணதிநா**—ஸஹஸ்ரஸ்தூணபதத்தை ஆதியிலே உடைத்தான வேத வாக்யத்தினால், **ஆம்நாதம்**—ஓதப்பட்டதான என்று விவக்ஷித்திருக்கிறார்பட்டர் என்று தேறியபின்பு வேறுவிதமான பாடம் இங்குப் பொருந்துவதற்கு நியாயமில்லையன்றோ.

## 7. ஸேநாந்யமந்யவிமுகாஸ் தமசிச்ரியாம

மேலே *ஸ்ரீரங்க சந்த்ரமஸம்* என்கிற ஐம்பதாம் ச்லோகத்தின் முடிவில் (தமசிச்ரயாம:) என்று பலரும் சொல்லிவருவது அஸாது;

இந்த ச்லோகம் குரு பரம்பரைத் தனியன்களில் சேர்ந்ததாகையாலே ஸ்ரீவைஷ்ணவவுலகமெல்லாம் அநுஸந்திக்க ப்ராப்தமாயிற்று. எல்லாரும் (அசிச்ரயாம:) என்று சொல்லுவதாகக் காதில்விழுகிறது. அப்படியொரு ரூபம் கிடையாது. **அசிச்ரியாம**—இது லுங் உத்தம புருஷபஹுவசந ரூபம். ஆச்ரயித்தோமென்றபடி. ஸூத்ரவதீ விஷயமான மேல் ச்லோகத்தில் (ஸூத்ரவதீம் ஆசிச்ரியம்) என்றதும் காண்க. அது ஏக வசநம், இது பஹுவசநம்; அங்கு ஆங் உபஸர்க்க யோகமுண்டு, இங்கு அஃது இல்லை என்றிவ்வளவேவாசி.

## 8. ஸௌந்தர்ய ஸம்பதவலிப்தமிவாலிஹீய

மேல் * ஸிம்ஹாஸநே கமலயா * இத்யாதியான அறுபத்தாறும் ச்லோகத்தின் முடிவில் *ஸௌந்தர்ய ஸம்பதவலிப்த **மிவாலிஹீயம*** என்றே புஸ்தகங்களிற்பாடம். இங்ஙனே சொல்லியும் வருகிறார்கள். (ஆலிஹீயம்) என்றொருரூபம் தேறாது. **ஆலிஹீய** என்று அநுஸ்வார ரஹிதமாகவே ஓதவேணும். இதற்கு 'விழுங்கக்கடவேன்' என்று பொருள். எம்பெருமானை நம்மாழ்வார் *விழுமியவமரர் முனிவர் விழுங்கும் கன்னற்கனி* என்கிறார். அந்த ஸமாதியாலே எம்பெருமானை விழுங்க விரும்புகிறபடி.

## 9. ஸ்ரீரங்கராஜ மநிமேஷ மநுஸ்ரியாஸ்ம

(ச்லோ 67.) * ஆபாதமூல மணிமௌலீ த்யாதி ச்லோகத்தின் முடிவில் "ஸ்ரீரங்கராஜ மநிமேஷ **மநுச்ரயாஸ்ம**" என்கிற பாடம் வெகு ப்ரஸித்தமாய்விட்டது. '**ச்ரயாஸ்ம** என்றொரு ரூபம்கிடையாது. 'ச்ரிஞ் ஸேவாயாம்' என்கிற தாதுவில் ஆசீர்லிங் உத்தம புருஷபஹுவசந ரூபம் என்று ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதா எழுதியிருப்பது ப்ராமாதிகம். அப்படியானால் **ஸ்ரீயாஸ்ம** என்றாகுமே யல்லது 'ச்ரியாஸ்ம' என்றாகாது. **ச்ரயாஸ்ம** என்று காணப்படும் பாடமும் தவறே. '**அநுஸ்ரியாஸ்ம**' என்பதே யுக்தமான பாடம். सृ - गतौ என்கிற தாதுவில் ஆசீர்லிங் உத்தம புருஷபஹுவசந ரூபமிது. **அநுச்ரயாம** என்று பாடமிருந்தால் அதில் அவத்யமில்லை. இது ஸ்ரீங்தாதுவின் லோட்டில் உத்தம புருஷ பஹுவசநரூபமாகும். ஆசீர் லிங்ரூபமாகப் பூருவர்கள் எழுதியிருப்பதால் அதற்குச் சேர (அநுஸ்ரியாஸ்ம) என்பதே மிகப்பொருந்தும்.

## 10. இத்யூசுஷ்யபயங்கரே

மேலே (70) * ஏதே சங்ககதா ஸுதர்சநப்ருத: * என்னும் ச்லோகத்தில் மூன்றாவது பாதத்தில் 'इत्यूचिषि—இத்யூசிஷி' என்றே பல பதிப்புகளிலுள்ளது. ஓதுவாரும் இங்ஙனே ஓதிவருகிறார்கள். இது மிகத் தவறு. ऊचिवान् என்பது ப்ரதமா விபக்தியில் ரூபமானால் ஸப்தமியில் (ஊசுஷி) என்றுதானாகும். तस्थिवान् - तस्थुषि, जग्मिवान् जग्मुषि । ऊषिवान् ऊषुषि.

இத்யாதிகள் போலே. இப்படிப்பட்ட ரூபங்கள் சாந்தஸங்கள்—வேதத்திற்கு உரியவை. ஆனாலும் மஹாகவிகள் யதேஷ்டமாக லோகத்திலும் ப்ரயோகித்து வருகிறார்கள். ஸித்தாந்த கௌமுதியில் “कवयस्तु बहुलं प्रयुञ्जते ; * तं तस्थिवांसं नगरोपकण्ठे * என்றுள்ளதுகாண்க.

## 11. கதமதீமஹி ரங்கதுர்யம்

(ச்லோ. 71.) * அங்கை ரஹம்ப்ரதமிகா சரிதேத்யாதி ச்லோகத்தில் * ஹ்ருதி ததீமஹி * என்னும் பாடத்தில் பொருத்தமில்லையென்றும் * கதமதீமஹி * என்கிற பாடமே பொருந்துமென்றும் இது ஆரம்பத்தில் முதல் விஷயமாக நிரூபிக்கப் பட்டிருப்பது காண்க.

## 12. விச்வபாரீண வ்ருத்தி

மேல் (89) * ஏகைகஸ்மிந் பரமவயவே * இத்யாதி ச்லோகத்தின் முடிவில் “ **விச்வ பாரீண வ்ருத்திம்** ”. என்று ஓதிவருகிறார்கள் ; புஸ்தகங்களிற் பாடமு மிதுவே. இது தவறு. இது பும்லிங்க ரூபமாக வுள்ளது. சக்ஷுஸ்ஸில் அந்வயிக்கவேண்டி யிருப்பதால் (வ்ருத்திம்) என்றிருக்கத் தகாது ; (வ்ருத்தி) என்று க்லீபமாக இருக்கத்தக்கது.

## 13. விஷ்வத்ரீசீ க்வாபி

(ச்லோ. 121.) * வைபூஷண்யாம் காந்திராங்கீ நிமக்நா விஷ்வக்த்ரீசீ * (विष्वग्ध्रीची) என்று புஸ்தக பாடமும் ஓதுவார் பாடமுமுள்ளது. **விஷ்வத்ரீசீ** என்பதே ஸாது பாடம்.

## 14. ப்ரவால நவமஞ்ஜரீர் நகருசீ:

(ச்லோ. 126.) * **புநாநி புவநாந்யஹ** மித்யாதி ச்லோகத்தில் நான்காவது பாதம் “ **ப்ரவால நவமஞ்ஜரீ நகருசீ:** ” என்று ஸமஸ்தமான பாடம் சுவையற்றது ; ‘ப்ரவால நவமஞ்ஜரீ :’ என்று வ்யஸ்தமாக்கி ஓதவேணும்.

# இனி உத்தர சதகத்தில் சில பரிஷ்காரங்கள்

## 15. அந்தங்கரண்யஸ் ஸ்ம்ருதவாந் மநுஸ் தத்

* யா வேதபாஹ்யா: * இத்யாதியான இரண்டாம் சுலோகத்தின் நான்காவது பாதத்தில் **அந்தங் கரிண்ய:**’ என்பது பிழையுற்ற பாடம். ‘அந்தங்கரணீ’ என்று ரூபம் தேறுமேயல்லது ‘அந்தங்கரிணீ’ என்று தேறாது. வரதராஜ ஸ்தவத்தில் (ச்லோ. 54) बद्धो बन्धक्षपणकरिणीम् என்பதும் இப்படித் தவறான பாடமே. அங்கும் * **பந்தக்ஷபணகரணீம்** * என்பதே ஸாதுபாடம்.

## 16. ஜகதுஷே, ஜகதிஷே

(ச்லோ. 12.) * அங்கீக்ருத்ய து ஸப்தபங்கி குஸ்ருதிம் * இதில் மூன்றாவது பாதத்தில் **ஜகதுஷே** என்கிற பதம் வருகிறது. (ச்லோ. 23.) * தேஹோ தேஹிநி காரணே * இதில் மூன்றாவது பாதத்தில் **ஜகதிஷே** என்கிற பதம் வருகிறது. முந்தினது ஸுபந்தம்; சதுர்த்தீவிபக்தியின் ஏகவசந ரூபம். जगद्वान् என்பது ப்ரதமைகவசனம். ஆகவே இது ஸுபந்த பதம். **ஜகதிஷே** என்பது திஙந்தம். சொல்லப்பட்டாய் என்று பொருள். இந்த வாசி தெரியப்பெறாதவர்கள் மாற்றிச் சொல்லிவிடுகிறார் கள். கவனிப்பது.

## 17. ஸமாதிசயாநஸங்க்யா நிர்லேப

(ச்லோ. 27.) * दोषोपधावधिसमातिशयानसंख्यानिर्लेपमङ्गलगुणौघदुघाः * என்கிற வரையில் ஸமஸ்தமான ஒரேபதம். **தோஷ**—குற்றமென்ன, **உபதா**—உபாதியென்ன, **அவதி**—எல்லே யென்ன, **ஸம**—ஸத்ருசவஸ்துவென்ன, **அதிசயாந** - மேற்பட்ட வஸ்துவென்ன, **ஸங்க்யா** - எண்ணிக்கை யென்ன (ஆகிய இவற்றினுடைய) **நிர்லேப**—ஸம்பந்த மில்லாத..............என்று பொருள். அர்த்த ஸ்திதி இப்படியிருக்க, ஸம்ஸ்க்ருத வ்யாக்கியாதா, தோஷோபதாவதி ஸமாதிசயா:, என்று ஒருபதமாகப் பிரித்தும், **நஸங்க்யா:** என்று ஒரு பதமாகப் பிரித்து (நஞ்ஸமாஸ:) என்றெழுதியும் ரஸாபாஸப் படுத்தியிருப்பது மிகவும் வருந்தத்தக்கது. தத்வத்ரய—ஈச்வர ப்ரகரணத்தில் (8) "இவனுடைய ஜ்ஞாநசக்த்யாதி கல்யாண குணங்கள் நித்யங்களாய் நிஸ்ஸீமங்களாய் நிஸ்ஸங்க்யங்களாய் நிருபாதி கங்களாய் நிர்தோஷங்களாய் ஸமாதிகரஹிதங்களாயிருக்கும்" என்ற விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் இந்த ச்லோகத்தைப் பூர்த்தியாக உதாஹரித்தருளி யிருப்பதும் காண்க.

## 18. ஸர்வபதீந மீக்ஷணம்

(ச்லோ. 29.) * நயநச்ரவணே த்ருசா ச்ருணோஷி * இதில் நான் காவது பாதம் घटते सार्वपथीनमीक्षणम्—கடதே ஸார்வபதீந மீக்ஷணம், என்று ஸகல புஸ்தகங்களிலும் பாடம் காண்கிறது. '**ஸார்வபதீகம்**' என்பது வியாகரண விருத்தம். 'ஸர்வபதீநம்' என்பதே ஸாது. * तत्सर्वादेरित्यादिना खः * विषयेषु नैष्ठिकानां सर्वपथीना मतिः क्रमते * என்றான் முராரி மிச்ரனும். ஸர்வதோ முகமான என்று பொருள்.

## 19. ஸ்வாநுவிதாபராத விதயோ:

(ச்லோ 43.) * ஸ்வாதீநே ஸஹகாரி காரணகணே கர்த்து: * இந்த ச்லோகத்தில் *போக்துஸ் ஸ்வாநுவிதாபராத விதயோ ராஜ்ஞ:* இத்

யாதியான இரண்டாவது பாதத்தில் "ஸ்வாநுவிதாபராதவிதய:* என்று ப்ரதமாவிபக்தியாக வைத்துப் பதம்பிரித்து உரை செய்தார்கள் முன்புள்ள வியாக்கியாதாக்கள். அது ஸர்வாத்மநா அசங்கதம். 'ஸ்வாநுவிதாபராத **விதயோ**:' என்று ஸப்தமியாகப் பதவிபாகம் செய்தாலல்லது பொருந்தாது. இதற்குக் கீழ்ச்லோகத்தில் [*நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச* இத்யாதியில்] எம்பெருமான் சேதநர்களின் கருமங்களுக்குப் பரதந்திரனாயிருந்துகொண்டு ஸ்ருஷ்டிகளை நடத்துகிறனாகையாலே அவனுக்கு வைஷம்ய நைர்க்ருண்ய ப்ரஸக்தியில்லையென்றருளிச் செய்தார். அதன் மேல் ஒரு சங்கையுண்டாயிற்று ஈச்வரனைக் கர்மபரதந்திரனென்றால் அவன் நிரங்குச ஸ்வதந்திரனென்பது குலையுமே என்று. இந்த சங்கையை நான்கு த்ருஷ்டாந்தங்கள் காட்டிப் பரிஹரித்தருளுகிறார்—இந்த ச்லோகத்தில். த்ருஷ்டாந்த வாக்ய மொவ்வொன்றிலும் ஷஷ்ட்யந்தமானவொரு பதமும், ஸப்தம்யந்தமான ஒரு பதமும், ப்ரதமாந்தமானவொரு பதமுமாக மூன்று பதங்கள் சேருகின்றன. ப்ரதமாந்தமான பதம் 'கடாக்ஷணம்' என்பதொன்றே நான்கு திருஷ்டாந்த வாக்யங்களிலும் சேருகின்றது. மற்ற ஷஷ்டியும் ஸப்தமியும் பேதிக்கின்றன. (1) கர்த்து: ஸஹகாரி காரணகணே; (2) போக்து: சரீரே; (3) தாது: அர்த்திஜநே; (இவை போலவே) (4) சாஸிது: ராஜ்ஞ: ஸ்வாநுவிதா அபராதவிதயோ: கடாக்ஷணம். என்பதாக விவக்ஷிதமாகையாலே (ஸ்வாநுவிதாபராதவிதய:) என்று ப்ரதமாந்தமாகக் கொள்ளுவது பொருந்தவேமாட்டாது. இந்தப்பற்றி அடியேனுடைய தத்வார்த்த சிந்தாமணி வியாக்கியானத்தில் விரிவு காண்க.

## 20. த்ருஷ்ட்வா ஏகைகம் ஸமுத்விஜதே ஜந:

(ச்லோ 64.) *ந்ருஹரி தசயோ: பச்யந்* இதில் இரண்டாவது பாதம் *நரமுத ஹரிம் த்ருஷ்ட்வா ஏகைகம் ஸமுத்விஜதே ஜந:* என்பது. ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதா இவ்வண்ணமாகவே வியாக்கியானம் செய்துவிட்டு முடிவில் "समुद्विजतां जन: इति पाठश्चेत् समीचीनम्" என்றெழுதி வைத்தார். **ஸமுத்விஜதாம்** என்று பாடமானால் நன்று என்கிறார். இதனால் வக்தாவின் கருத்தை அவர் உள்ளபடி க்ரஹித்திலரென்று தோன்றுகிறது. **ஸமுத்விஜதே** என்பதற்கு (**பிபேதி**) என்று பொருளுரைத்தார். அப்பொருள் இங்கு விவக்ஷிதமாயிருக்கத் தகுதியில்லை. ஸமுத்வேகமென்பது இங்கு ஜுகுப்ஸைப்படுதல். ஸமுத்விஜதே என்றது ஸமுத்விஜேத என்றபடி. 'நானழைத்தால் உடனே வருகிறான்' என்றாற்போலே லோக வ்யவஹாரமுள்ளது. அங்கு வருகிறானென்றது வருவானென்றபடி. இந்த ரீதி ஸம்ஸ்க்ருத பாஷையிலுமொக்கும். மநுஷ்யத்வ ஸிம்ஹத்வங்களினுடைய இயற்கையான சேர்த்தியழகை ஸேவித்துக் களிக்கின்ற ஜனமானது மனித ரூபத்தையோ அல்லது ஸிம்ஹ ரூபத்தையோ ப்ரத்யேகமாகப் பார்த்தால் வெறுப்படையும் என்ற கருத்

திலே போல, சர்க்கரையையும் பாலையும் சேர்க்கின்ற கணக்கிலே இரண்டு திருவுருவங்களைச் சேர்த்துக்கொண்ட பெருமாளைச் சிந்திக்கிறோ மென்பது இங்கு விவக்ஷிதம். ஸமுத்விஜதாம் என்கிற பாடம் இதற்கு அநுகூலமாகாது.

## 21. தவ பரோஹமகாரிஷி

(ச்லோ 102.) *தவ பரோஹ மகாரிஷி* இதில் 'அகாரிஷி' என்கிற சுத்த பாடத்தைவிட்டுப் பலர் 'அகார்ஷி ஹி' என்று ஓதிவருகிறார்கள்; புஸ்தகங்களிலும் அது ஏறியிருக்கிறது. இதரக்ரந்தங்களில் இந்த ச்லோகம் உதாஹரிக்கப்பட்டுள்ள இடங்களிலும் (அகார்ஷிஹி) என்று காண்கிறது. அது தவறு. அகாரிஷி—கர்மணிலுங்; உத்தம புருஷைக வசனம். அடியேன் செய்யப்பட்டேனென்று பொருள்.

## 22. ஆக்ராயைச்வரகந்தம்...மஹிதஸ்வபாவ:

இந்த முப்பத்தெட்டாவது சுலோகத்தில் முதல் பாதத்தில் 'ஈச்வர கந்தம்' என்றும் 'ஐச்வரகந்தம்' என்றும் இருவகையான பாடங்கள் காண்கின்றன. இதில் விசேஷ சர்ச்சைக்கு இடமில்லை. இதில் நான்காவது பாதத்தில் *வைபுல்யாத் மஹித ஸ்வபாவ இதி வா* என்கிற பாடம் பூர்வ வியாக்கியானத்திலும் அடியேனுடைய வியாக்கியானத்திலு முள்ளது. இங்கு (மஹித ஸ்வபாவ:) என்பது அஸாதுவான பாடமென்றும், (மஹிமஸ்வபாவ:) என்பதே ஸாதுவான பாடமென்றும், திருவாய்மொழியில் (4-5-1. *வீற்றிருந்தேழுலகுமென்கிற பாட்டின் ஈட்டு அடைய வளைந்தானரும்பத விளக்கத்தில் (மஹிம ஸ்வபாவ:) என்கிற பாடமே கொள்ளப்பட்டிருக்கிறதென்று காட்டி இதுதான் உபபந்நமான பாடமென்றும் சிலர் வெளியிட்டிருக்கிறார்கள். இதைப் பற்றின ஆராய்ச்சியே இச்சிறு நூல் எழுவதற்கு மூலமாகும். இவ்விடத்திற்கு அடியேனுடைய வியாக்கியானம் அஸமஞ்ஜஸமாயும் ரஸமற்றதாயுமிருக்கிறதென்றும் அவர்கள் எழுதியுள்ளார்கள்.

இவ்விடத்தில் விவக்ஷிதங்களை விரிய வுரைக்கின்றேன். (மஹிம ஸ்வபாவ:) என்கிற பாடத்தில் அடியேன் அநுபபத்தியையோ அஸாமஞ்ஜஸ்யத்தையோ நினைப்பவனல்லேன். (மஹித ஸ்வபாவ:) என்னும் பாடத்தை அடியேன் புதிதாகக் கொண்டவனல்லேன் என்பது யாவருமிசையக் கூடியது. அந்த பாடத்தின்படி பொருள் விவரித்திருப்பது அஸமஞ்ஜஸமுமன்று, சுவையற்றதுமன்று. ஜீயர் நாயனாருளிச் செய்த நக்ஷத்ரமாலிகையில் இரண்டாவது ச்லோகம்—*யதுரஸி பரணீயா **ஸ்ரக் விகஸித வகுளாநந்தா, ஸ ஜயதி மஹிமா நாதோ முராரிபு பதஸக்தோ ந:*** என்பது. இதில் யச்சப்த தச்சப்தங்களால் விவக்ஷிதர் ஸாக்ஷாத் நம்மாழ்வாரே யொழிய நம்மாழ்வாருடைய மஹிமைக்கு இங்கு விவக்ஷா

லேசமுமில்லை. ஆனல் மூலத்தில் (**ஸ: மஹிமா ஜயதி**) என்று தானுள்ளது. மஹிமசாலியான நம்மாழ்வாரை **மஹிமா** என்றே வ்யபதேசித்திருப்பதானது மஹிமப்ராசுர்ய நிபந்தநம். *தத்குண ஸாரத்வாத் து தத்வ்யபதேச: ப்ராஜ்ஞவத்* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தை ஸ்மரித்து வியாக்கியானம் செய்யப் பாங்குள்ளது. "மஹிமவானை ஆழ்வாரை மஹிமா என்று சொல்லியிருப்பது தவறு" என்று இதுகாறும் யாரும் க்ஷேபித்ததில்லை. ஆனல் (ஸ ஜயதி **மஹிதோ** நாத:) என்று பாடம் காண்கிறதென்று ஒரு மஹான் தெரிவித்தால், அப்படியிருக்கத்தகாது, இப்படித் தானிருக்கவேணும்' என்று ஆக்ரஹித்துப் பேச ஒருவரும் முன் வரகில்லார். 'ஸ ஜயதி மஹித: என்கிற பாடம் சிறந்ததுதான்' என்றும் கொண்டாட நேரும். இதே ரீதிதான் ப்ரக்ருத ஸ்தலத்திலும். (மஹித ஸ்வபாவ:—மஹிமஸ்வபாவ:) என்ற இரு பாடங்களுள் ஒரு பாடத்தையும் தூஷிக்க ப்ரமேயமில்லை. இதனை நன்கு உபபாதிக்கக் கேளீர்.

ஸர்வேச்வர ஞெருவன் தவிர மற்ற இந்திரன் முதலான சிறு தெய்வங்களெல்லாம் மிகச் சிறிதளவான ஐச்வர்யத்தைக்கொண்டு செருக்குற்றிருக்க, ஸர்வேச்வரன்மட்டும் செருக்குறு திருப்பதை உபபத்தியுடன் நிர்வஹிப்பது இங்கு விஷயம். க்ஷுத்ர தெய்வங்கள் செருக்குறுவதன் காரணத்தை உபபாதிக்க வேண்டிய அவசியமில்லை. நிரவதிகைச்வர்ய சாலியான ஸர்வேச்வரன் செருக்குறாமையின் காரணமே இங்கு ஆசார்ய ஸார்வபௌமரால் விலக்ஷணமேதாவிகாஸம் பொலிய நிரூபிக்கப்படுகின்றது.

ஸ்வரூபம் ஸ்வபாவம் என இரண்டு ப்ரஸித்தமானவை. இதர தெய்வங்களுக்கு ஸ்வரூபமும் சிறிது, ஸ்வபாவமும் சிறிது என்பது நிர்விவாதம். ஸ்வரூபம் அணுவாகையாலே சிறிது. இனி ஸ்வபாவமாவது ஐச்வர்ய விசிஷ்டத்வம். இதுவும் ஸர்வேச்வரனையபேக்ஷித்து மிகச் சிறிது. நிறையாதகுடம் தளும்புவது இயல்வாதலால் ஸர்வாத்மநா அபூர்த்தியுள்ள அற்பதெய்வங்கள் தளும்புவது ஸஹஜமே யென்றதாயிற்று. இதனல் ஸர்வேச்வரன் தளும்பாமைக்கும் ஹேது சொல்லிற்றாகும். நிறைகுடம் தளும்பாத வாறுபோல, எம்பெருமானுடைய ஸர்வைச்வர்ய பரிபூர்த்தியே தளும்பாமைக்கு ஹேது வென்று தேறிற்றாகும். இதுதன்னை இரண்டு ப்ரகாரத்தாலே யருளிச் செய்கிறார்.

(1) **[த்வம் த்வந்மஹிம்ந: பர:] த்வம்** என்றது ஸ்வரூப ஸ்பர்சியான சொல்; **த்வந்மஹிம்ந:** என்றது ஸ்வபாவ ஸ்பர்சியான சொல். ஸ்வரூபமானது ஸ்வபாவத்திற் காட்டிலும் பெரிது என்கை. அஸ்மதாதிகளிடத்திலும் இந்த்ராதிகளிடத்திலும் ஸ்வபாவப் பெருமை சிறிது காணமுடியுமே யொழிய ஸ்வரூபப் பெருமை காணவே முடியாது. இதற்கு மாறானது எம்பெருமானது நிலைமை. அவன்பக்கலில் ஸ்வரூபத்திற் காட்டிலும் வேறுபட்டதொன்று இல்லவேயில்லை யென்று தோன்றும். அப்

படிப்பட்ட கொள்கையடையாரும் பலருளர். திருவாய்மொழியில் *புகழு நல்லொருவன் *நல்குரவும் செல்வும் *மாயாவாமனனே* என்னும் பதிகங்கள் எம்பெருமானுடைய விபூதி விஸ்தாரத்தைப் பேசுவன. இங்ஙனே அவனுடைய விபூதிகள் விஸ்தீர்ணமாயிருக்கச் செய்தேயும் ஸ்வரூபம் ஸங்குசிதமா யிருப்பதன்று. அதுவும் அஸங்குசிதமே. ஆக [த்வம் த்வம்மஹிம்நः பரः] என்னுமிந்த வாக்யத்தினால் ஸ்வரூப ப்ருஹத்த்வம் தெரிவிக்கப்பட்டதாயிற்று. உடனே [**மஹிதஸ்வபாவः**] என்பதனால் ஸ்வபாவ ப்ருஹத்த்வம் தெரிவிக்கப்படுகிறது. 'மஹிதः ஸ்வபாவः' என்று இரண்டு பதமாகவும் பிரிக்கலாம். இடையில் விஸர்க்கமின்றி ஏகபதமாக வைத்து பஹுவ்ரீஹியாகவும் கொள்ளலாம். ஸமஸ்தபதமாக வைத்தால் 'த்வம் மஹிதஸ்வபாவः' என்றதாகும். வ்யஸ்தபதமாகக் கொண்டால் 'தவ ஸ்வபாவः மஹிதः' என்றதாகும். ஸ்வரூபத்திற் காட்டிலும் ஸ்வபாவமே மிகப்பெரிதென்னலாயிருக்கு மென்கை.

வரதராஜ பஞ்சாசத்தில் * येनाधिरोहति मतिस्त्वदुपासकानां सा किं त्वमेव तव वेति वितर्कडोलाम्—யேநாதிரோஹதி மதிஸ் த்வதுபாஸகாநாம் ஸா கிம் த்வமேவ தவவேதி விதர்க்க டோலாம்* என்றுள்ள ச்லோகம் இங்கே ஒருவாறு அநுஸந்தேயம். **த்வமேவ வா? தவ வா?** என்கிற விதர்க்கமொன்று உண்டாவதாக இங்குச் சொல்லப்படுகிறது. அஸ்மதாதிகளிடத்தில் **அஹம்** என்கிற வ்யவஹாரமும் **மம** என்கிற வ்யவஹாரமுமாக இருவகைப்பட்ட வ்யவஹாரமுமுள்ளன. **மம** என்னும்போது அந்வயிக்கிற பொருள்கள் **அஹம்** என்னும்போது அந்வயிக்கமாட்டா. எம்பெருமான் திறத்து இங்ஙனேயல்ல. அவன் தன்னைப்பற்ற **அஹம்** என்றாலும், நாம் அவனைப்பற்ற **ஸः** என்றாலும் அதிலே ஸகலைச்வர்ய விசிஷ்டமான பொருள் தோன்றக் குறையில்லை. தண்ட குண்டலாதிகள் போலன்றிக்கே கரசரணாதிகளோடொப்ப அப்ருதக் ஸித்த விசேஷணங்களானவற்றோடு விசிஷ்டனாகவே எம்பெருமான் ஸத்தை பெற்றிருப்பதனால்.

இவ்விஷயத்தை நெஞ்சில் நன்கு பதிய வைத்துக்கொண்டால் ப்ரக்ருத விவாத ச்லோகத்தில் விவக்ஷிதமான விஷயம் ஹ்ருதயங்கமமாகும். **மஹிதः ஸ்வபாவः** என்கிற பாடத்தில் அவத்யலேசமும் காண முடியாது. ஐச்வர்யம் வந்தேறியன்று, இயற்கையாகவே அமைந்தது என்கிற பொருள்தான் இதிலுள்ளது.

**மஹித ஸ்வபாவः** என்பதை ஸமஸ்தபதமாகவுங் கொள்ளலாம், வ்யஸ்தபதமாகவுங் கொள்ளலாமென்றோம். ஸமஸ்தபதமாகக்கொண்டால் பஹுவ்ரீஹியாகிறது. மூன்றாவது பாதத்தில் (த்வம்) என்றிருப்பதனால் எளிதாக இணங்கும். வ்யஸ்தபதமாகக்கொண்டால் (தவ) என்பது ஆக்ஷிப்தமாகும். அதிலும் ஒரு குறையில்லை. அதிமாநுஷஸ்தவத்தில் " அத்யாபி நாஸ்த்யுபரதிஸ் த்ரிவிதாபசாராத் பாபः பரே நிபதிதோஸ்மி தமஸ்ய

பாரோ'' என்றதை இங்கு நிதர்சநமாகக் கொள்ளலாம். முதல் பாதத்திற்கு (மம) என்பது இணங்கும். இரண்டாம் பாதத்திற்கு (அஹம்) என்பது இணங்கும். இதை க்ரமபங்கமாக நினைத்துச் சிலர் "அத்யாபி நாஸம்யுபரதஸ் த்ரிவிதாபசாராத்'' என்று அநுஸந்திப்பதுண்டு. ப்ரக்ருதத்தில் (மஹிதஸ்வபாவ:) என்று ஸமஸ்தமான பாடம் அந்த ரீதிக்குச் சேரும். இது அபசப்தமுமன்று, அஸமஞ்ஜஸார்த்தகமுமன்று) மஹிமஸ்வபாவ:) என்னும் பாடத்தில் தேறுகிற கருத்து இப்பாடத்தில். அநாயாஸமாகவே தேறும். 'மஹிமா ஸ்வபாவ:' என்று பாடமிருந்தாலும் ஏற்கும். எம்பெருமானுடைய ஷாட்குண்யத்திலொன்ருன பலத்தை விவரிக்கின்ற ச்லோகம் இந்த உத்தர சதகத்திலேயே உள்ளது *ஸ்வமஹிமஸ்திதிரீச ப்ருசக்ரியோபி* இத்யாதி. ***ஸ்வே மஹிம்நி ப்ரதிஷ்டித:*** என்கிற உபநிஷத் வாக்யத்தை யுட்கொண்டு 'ஸ்வமஹிம ஸ்திதி:' என்றருளிச் செய்தனர். அவ்வண்ணமாகவே ப்ரக்ருதத்திலும் ஓர் உபநிஷத் வாக்யத்தை யுட்கொண்டே பட்டரருளிச்செய்திருக்கவேண்டும். அதனை ஆராய்ந்தறிய முயல்வோமாக.

ஈடு முப்பத்தாறாயிரப்படியில் ***ஆற்றல் மிக்காளுமம்மானை*** யென்றவிடத்துக்காணும் நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி இந்தப் பாடவிவாதத்தை அறுக்ககிற்குமதன்று. அடையவளைந்தானரும்பதவுரைகாரர் எடுத்துக் காட்டும் மேற்கோள்களிலும் தத்விவரணங்களிலும் வைபரீத்யம் அதிகம் என்பது ஜகத்ப்ரஸித்தம். ஈட்டை நிர்வஹிப்பதற்கு அவ்வரும்பதவுரை பெரும்பாலும் உபகாரகம் என்பதை நாம் அபலாபம் செய்யகில்லோம். மஹோபகாரகமாயிருக்கச் செய்தேயும் மானிடரியற்கைக்குரிய மயர்வு மறப்புகளினுல் பல விபர்யயங்களுக்கும் அது கொள்கலமாயிருக்கின்றது. *என்னீர்மை கண்டிரங்கிப் பாசுரத்தினீட்டிலும் இருபத்து நாலாயிரப்படியிலும் எடுத்துக் காட்டப்பட்டுள்ள குறுந்தொகைச் செய்யுளை மிக மாறுபாடாக எடுத்துக் காட்டியும் அஸங்கதமாக வுரை செய்து காட்டியுமிருப்பதை அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையில் விரிவாகக் காணலாம். அது போன்ற பல விஷயங்களை மற்றும்பல ஆராய்ச்சி நூல்களிலுமெடுத்துக் காட்டியிருக்கின்றேன். கோயிலில் உபய வேதாந்த ப்ரவசந ப்ரவீணராயெழுந்தருளியிருந்த (கீர்த்தி மூர்த்தி) கபிஸ்தலம் அனந்தாசார்ய ஸ்வாமி பத்தராவி ஸ்வாமி போல்வார் இவ்வரும்பத வுரையிலுள்ள பிறழ்வுகளைத் துண்டு துண்டாக வெடுத்து ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். *தீர்ப்பாரை யாமினி ஈட்டுப்ரவேசத்தில்—"எல்லாருமொக்க இவள் தசையைக் கண்டு கலங்கிக்கிடக்க, இவ்வளவிலே நாட்டிலே வேரறிவார் விரகறிவார் மந்த்ரமறிவார் ஔஷதமறிவாரடங்கலும் வந்துபுகுர'' என்றுள்ளது. இங்கு 'வேரறிவார் விரகறிவார்' என்பதற்கு என்ன பொருளென்ருல், நோயின் மூலத்தை **வேர்** என்கிறது; நோய் தீர்க்கும் வழியை விரகு என்கிறது. இங்ஙனமிருக்க, அரும்பதவுரைகாரர் விரகு என்று இடையின ரகரமாகக் கொள்ளாமல் வல்லின றகரமாகக் கொண்டு காஷ்ட

மென்று பொருளெண்ணி, " **வேர்**-பச்சை மூலம்; **விறகு**-சுஷ்கமூலிகை " என்றெழுதிவிட்டார் என்று இங்ஙனே பல பல எடுத்துக் காட்டினவற்றைக் கேட்டிருக்கிறேன். " ஏன்? இப்படித்தானிருந்தாலென்ன ?" என்று முஷ்டி பிடிப்பாருமுளர்.

ப்ரக்ருதவிசாரத்தில் இத்தகைய விஷயங்கள் அவசியமற்றவை. (மஹிம ஸ்வபாவ:) என்று தவறான பாடத்தைக் காட்டிவிட்டாரென்று சொல்லுவாரில்லை. ஈட்டு ஸ்ரீஸூக்திக்கும் 'மஹிமஸ்வபாவ:' (அல்லது) 'மஹிதஸ்வபாவ:' என்பதற்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை. அரும்பதவுரைகாரர் இவ்விடத்திற்கு *ஆக்ராயைச்வரகந்தம்* என்னும் சுலோகத்தை ஸ்வாசார்யர் **ப்ராஸங்கிகமாக** அருளிச் செய்வரென்று எழுதியுள்ளார். ஆகவே மூலமான ஈட்டோடு இதற்கு நேராகச் சேர்த்தியில்லையென்பது ஸ்பஷ்டம். '**ஆற்றல்மிக்காளும்**' என்றது அநுத்ததனைய் ஆளும்படியைச் சொல்லுகிறதென்று நம்பிள்ளை திருவுள்ளம். அதற்கு *ராமோ ராஜ்ய முபாஸித்வா* என்கிற வசனம் ஸம்வாதமாகக் காட்டப்பட்டது. அவ்விடத்திற்கு பட்டர் ஸ்ரீஸூக்தியும் ப்ரமாணமாக வேண்டுமானால் *த்வமநாவிலோ நிரவதேர் பூம்ந: கணேஹத்ய* என்னுமளவே பர்யாப்தம்.

## நிகமநம்

பிராசீன பாடங்களில் பிழைகள் புகுவது ஸஹஜம். அவற்றை சோதிக்க வேண்டியதும் விவேகிகளின் க்ருத்யம். அவசியம் திருத்தியேயாகவேண்டிய பிழைகளைத் திருத்துவதுதான் ப்ராமாணிகர்களின் பத்ததி. ஸ்வாமி யெம்பெருமானார் தனியனாகிய *யோநித்யமச்யுதேத்யாதி ச்லோகத்தில் " யுக்மருக்ம வ்யாமோஹத:" என்று நாமெல்லாரும் சொல்லிவருகிறோம். ஆந்திர மண்டலத்தில் 'வ்யாமோஹித:' என்று பலர் சொல்லக் கேட்டேன். இப்படியொரு அபத்தம் புகுந்து விட்டதே யென்று சோகித்தேன். ப்ருந்தாவனத்திலும் அப்படியே பல பண்டிதர்கள் சொல்லக் கேட்டபின்பு அதில் விமர்சம் செலுத்தத் தோன்றியது. விமர்சித்ததில் (வ்யாமோஹத:) என்ற பாடத்திற் காட்டிலும் (வ்யாமோஹித:) என்றபாடம் சுவையுள்ளதாகத் தோன்றியது. அச்யுத பதாம்புஜ யுக்ம ருக்மத்தில் எம்பெருமானார்க்கு வியாமோஹமுண்டானதாகக் காட்டுகிற (வ்யாமோஹத:) என்கிற பாடத்திற் காட்டிலும் அச்யுத பதாம்புஜ யுக்மருக்மமே ஸ்வாமியை வியாமோஹிப்பித்ததாகத் தெரிவிக்கிற (வ்யாமோஹித:) என்கிறபாடம் சிறந்ததல்லவா? " இவ்விரண்டு பாடங்களும் நிரவத்யமே யென்னலாம்; இவற்றுள் எது சிறந்தது என்கிற விசாரம் வேண்டா " என்று ஒரு பெரியவர் பகர்ந்தார். ப்ரக்ருதத்தில் " மஹிதஸ்வபாவ:—மஹிமஸ்வபாவ:" என்கிற இரண்டு பாடங்களும் நிரவத்யங்களே யென்னலாம். 'மஹிமஸ்வபாவ:' என்று அடையவளைந்தானரும்பத வுரையிற் காணும் பாடம் சிறந்தது என்றாலும் விவாத

மில்லை. (மஹிதஸ்வபாவ:) என்னும் பாடம் அஸமஞ்ஜஸமென்று தள்ளத் தகாததே. (மஹிதஸ்வபாவ:) என்பதை வ்யஸ்தமாகக் கொள்வதிற் காட்டிலும் ஸமஸ்தமாகக் கொள்வது ரஸவத்தரம் என்னலாம்.

வரதராஜஸ்தவத்தில் *அண்டாநாம் த்வதுதரமாமநந்தி ஸந்த:* என்பதொரு ச்லோகம். இதில் பூர்வார்த்தத்தில் ஒரு சங்கையை உத்க்ஷேபித்து உத்தரார்த்தத்தில் அதற்கு ஸமாதான மருளிச்செய்கிறார். தேவப்பெருமாளே! தேவரீருடைய திருவுதரம் ஸமஸ்தமான அண்டங்களுக்கும் இருப்பிடமாயிருக்க, இது க்ருசமாயிருக்கின்றதே ஏன்? என்பது சங்கை. இதற்கு என்ன ஸமாதான மென்றால்—[**மாஹாத்ம்யம் ஸ்வத இஹ யேஷா நூநமேஷாம் ருத்திஸ் ஸ்யாந் மஹிமகரீ ந ஹீதரேஷாம்**] என்பது உத்தரார்த்தம். இதன் பொருளை ஸம்ஸ்க்ருத வ்யாக்க்யாதா எழுதியுள்ள விதம் திருப்திகரமாகவில்லையென்று பல பெரியார் கூறுவதுண்டு. அது ச்லேஷ பங்கியில் அமைந்தது. ப்ரக்ருத விவாத ஸ்தலத்தில் அங்ஙனே ச்லேஷமொன்றுமில்லை.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீவானமாமலை ஜீயர்ஸ்வாமி [வர்த்தமாநஸ்வாமி] ஸ்தவங்களை யெல்லாம் இளமையிலேயே கண்டபாடஞ் செய்தருளின வித்வத்ஸார்வபௌமர். ப்ரக்ருத ஸ்தலத்தில் அந்த மஹாஸ்வாமியே ஆராய்ச்சி செய்தருளிப் பாடத்தில் ஔசித்யத்தை உலகுக்கு உபகரித்தருளலாம். .... .... .... .... *

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

எழுதிய

**பட்டர் ஸ்ரீஸூக்தி பரிஷ்காரம்**

முற்றுப் பெற்றது.

ஆழ்வான் ஸ்ரீஸூக்தி பரிஷ்காரம் அடுத்த இதழில் வெளிவரும்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

ஸ்ரீஸீதாலக்ஷ்மண பரதசத்ருக்ந ஹநுமத்ஸமேத ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# அபூர்வ ராமாயணம்

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

## ஸ்ரீ ராமாயண ஸாரம்

—: ❋ :—

## முன்னுரை

அபூர்வ ராமாயண மென்று பெயரிட்டு இதனை யெழுதத் தொடங்குகின்றேன். ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தின் ஆரம்பம் எப்படி யமைந்திருக்கின்ற தென்றால், தேவலோகத்திலிருந்து நாரத மஹர்ஷியானவர் நான்முகக்கடவுளின் நியமனத்தினால் வால்மீகி மஹர்ஷியின் ஆச்ரமத்திற்கு வந்துசேர, அந்த நாரதமுனிவரை வால்மீகிமுனிவர் வணங்கி வழிபட்டு "கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச்ச வீர்யவாந்?" என்று தொடங்கி ஒரு பதினாறு திருக்குணங்களைச் சொல்லி, இத்திருக்குணங்கள் அமைந்த ஒரு மனிதன் இப்போது இவ்வுலகிலுளனாயின் எனக்குச் சொல்லியருளவேணும்; உம்மிடத்தில் இதைக் கேட்டறிய எனக்கு மிகவும் ஆவலுள்ளது—என்று விண்ணப்பஞ் செய்கிறார்.

அதன்மேல் அந்த நாரதமுனிவர் மிகமகிழ்ந்து விடைகூறத் தொடங்கி "இக்ஷ்வாகுவம்சத்திற் பிறந்து ஸ்ரீராமனென்ற திருநாமம் பெற்றவன் ஒருவனுளன்; அவன் உலகம் நிறைந்த புகழாளன்; அளவற்ற சக்தி வாய்ந்தவன்; அவனது திருக்குணங்கள் என்னாலெடுத்துரைக்க முடியா; அவனே கோஸலராஜன் திருமகளான கௌஸல்யா தேவியின் வயிற்றிற் பிறந்த தசரத புத்திரன்; கடல்போல் மஹாகம்பீரன்; மஹாவீரன்; மிக்க பொறுமையாளன்; ஸத்யசீலன்" என்றுரைத்து உடனே அவனது சரிதையையும் சுருக்கமாக வுபதேசித்து முடிக்கிறார்.

பிறகு தம்மிடம் நேராக வந்த நான்முகக்கடவுளின் அநுக்ரஹத்தையும்பெற்று வான்மீகி முனிவர் இராமாயணத்தை இயற்றி முடித்தார்—என்பதாக ஆரம்பத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

நாரதமுனிவரை நோக்கி வான்மீகிமுனிவர் கேட்ட திருக்குணங்கள் எண்ணிக்கையில் பதினாறாக அமைந்திருப்பதால் "ஸ்ரீராமசந்திரன்" என்று சந்திரனாகக் கூறப்படுகின்றவனுடைய பதினாறுகலைகளோ இவை! என்னலாம்படி யுள்ளன அத்திருக்குணங்கள். அந்தப் பதினாறு திருக்குணங்களை விவரித்து அவற்றிலேயே இராமாயணகதை முழுவதும் அடங்கியுள்ளதென்று நிரூபணம் செய்யவே இப்போது அடியேன் முன்வருகின்றேன்.

வான்மீகிமுனிவர் நாரதமுனிவரிடம் உபதேசங்கேட்ட பிறகே இராமனைத் தெரிந்துகொண்டாரென்று சொல்வதற்கில்லை. முன்னமே அவர் ஸ்ரீராமமந்த்ரத்தை இடைவிடாது அநுஸந்தானம் செய்துகொண்டிருந்தவரென்றும், நான்முகன் தன்னுலகில் சதகோடி ப்ரவிஸ்தரமானதொரு ராமாயணத்தை இயற்றி நாரதர் முதலிய முனிவர்களுக்கு அதை ப்ரவசனஞ்செய்து, ராமபக்தரான வான்மீகி முனிவரைக்கொண்டு இந்நிலவுலகத்திலும் ஸ்ரீராமகதையைச் சுருக்கமாக ப்ரவர்த்தனம் செய்வதற்காக வான்மீகியின் ஆச்ரமத்திற்கு நாரதரையனுப்பினனென்றும் வரலாறு காண்பதனால் நாரதமுனிவரை நோக்கி வான்மீகிமுனிவர் விண்ணப்பஞ் செய்த திருக்குணங்களானவை இராமபிரானது சரிதைகளில் தேறிய குணங்களேயன்றி வேறல்லவென்பது நன்கு அறியத்தக்கது.

பகவான் இராமனாக இந்நிலவுலகில் திருவவதாரம் செய்தருளினது தன்னுடைய திருக்குணங்களை வெளியிடுவதற்காகவே யென்றும், ராவணஸம்ஹாரம் முதலியவை வியாஜமாத்திரமான பிரயோஜனங்களென்றும் தத்துவமுள்ளது. இதனை பட்டரென்னும் பேராசிரியர் *குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்கிற ஸ்ரீஸூக்தியினால் வெளியிட்டருளினர்.

ஆகவே ஸ்ரீராமாயணத் தொடக்கத்தில் வான்மீகிமுனிவர் கூறுகின்ற பதினாறு திருக்குணங்களில் இராமபிரானது சரிதை முழுவதும் அடங்கியுள்ளதென்றும், அந்தச் சரிதையை அவர் அல்லும் பகலும் மனனம் செய்துகொண்டிருந்தபடியினாலேயே அந்தத் திருக்குணங்கள் அவருடைய ஹிருதயத்தில் ஊறிக்கிடந்தனவென்றும், அவற்றையே அவர் வாய்வெருவினாரென்றும் தெரியவருகிறது. அந்தப் பதினாறு திருக்குணங்களையும் வரிசையாக விவரித்து, ஒவ்வொன்றிலும் அநுஸந்திக்கப்படவேண்டிய சரிதைகளையும் ஈண்டு விவரிக்க விரும்புகின்றேன். வான்மீகிமுனிவருடைய வினாக்களிலே இராமாயண கதைகளையடைத்து அநுபவிக்கு மிவ்வனுபவம் அபூர்வமாதலால் அபூர்வ ராமாயணம் என்று இதற்குப் பெயரிடலாயிற்று.

முன்னுரை முற்றிற்று.

# 1. கோ குணவாந் ?

## குணவானென்பதற்கு சீலகுணவானென்பதே பொருளெனல்

க: குணவாந் ? என்பது முதற்கேள்வி. சிறந்த குணங்களையுடையவன் யாவன் ? என்று பொதுவாய்க் கேட்பதாகச் சிலர் இதற்குப் பொருள் கொள்வர். அப்படியன்று ; சிறப்பாக ஒவ்வொரு குணத்தையுமெடுத்துக் கூறுமிந்த பிரகரணத்தில் குணவாந் என்கிறவிதுவும் குறிப்பிட்டவொரு குணத்தைக் கூறுவதேயன்றி, பொதுவாக 'நல்ல குணங்களையுடையவன் யாவன் ?' என்று கேட்கிறபடியன்று.

ஆளவந்தார் தம்முடைய ஸ்தோத்ர ரத்நத்தில் எம்பெருமானுடைய பல திருக்குணங்களை யமைத்து ஒரு ச்லோகமருளிச்செய்துள்ளார் ; அது *வசீ வதாந்ய:* என்கிற பதினெட்டாவது ச்லோகம். அதில் "வசீ, வதாந்ய:" என்று இரண்டு குணங்களைக் கூறியான பிறகு குணவாந் என்று கூறி, அதன் பிறகு ருஜு: சுசி: என்று தொடங்கிப் பத்தெட்டு குணங்களைக்கூறி, முடிவில "ஸமஸ்தகல்யாணகுணாம்ருதோததி:" என்று கூறப்பட்டுள்ளது. இதனால் இந்த ச்லோகத்தில் மூன்றாவது சொல்லாகவுள்ள குணவாந் என்பதற்கு [முன்னும் பின்னும் சொல்லப்பட்ட விசேஷகுணங்கள் போலவே] ஒரு விசேஷ குணமே பொருளாகக்கொள்ளப்படவேண்டுமென்பது தேறிநின்றது.

## சீலகுணத்தின் தன்மையை நிரூபித்தல்

அந்தக் குணம் எதுவென்னில் ; ஸௌசீல்ய குணமென்று பூருவாசாரியர்கள் திருவுள்ளம் பற்றியுள்ளார்கள். தன் மேன்மை பாராமல் தாழ்ந்தவர்களோடும் புரையறக் கலந்து பரிமாறும் சீலகுணத்திற்கே ஸௌசீல்யமென்று மறுபெயர் ; எல்லாக் குணங்களிற்காட்டிலும் இக்குணம் மிகச் சிறந்ததாதலால் இதற்கு குணம் என்றே சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டது. ப்ரக்ருதம் வான்மீகியின் வினாவில் கோ குணவாந் ? என்றுள்ளதானது—சீலகுணமுடையவன் யாவன் ? (அதாவது) தன் மேன்மையைச் சிறிதும் கணிசியாமல் தாழ்ந்தவர்களோடும் கலந்து பரிமாறுகின்றவன் யாவன் ? என்று கேள்வி கேட்டபடியாகின்றது. இத் திருக்குணத்திற்குச்சேர நாம் அநுஸந்திக்கக்கூடிய ஸ்ரீராம சரிதைகளைக் கேண்மின் :

## அவதாரமே சீலகுணத்தை விளக்குகின்றதென்பது

ஸ்ரீமந் நாராயணமூர்த்தி இராமபிரானாக இந்நிலவுலகில் திருவவதரித்தாரென்கிறவிதுவே சீலகுணத்தின் பரீவாஹமாகவுள்ளது. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் பத்தாவது ச்லோகம் *சீல: க ஏஷ தவ ஹந்த* என்று தொடங்குகின்றார். அந்தோ ! இது என்ன சீலகுணம் ! இதை எடுத்துப்பேச யாரால் முடியும் ? என்கிறார் ;

அந்த சீலகுணத்தை எதுகொண்டு நிரூபிக்கிறுரென்னில்; *அத்ராவதீர்ய நநு லோசநகோசரோபூ:* என்பதே அந்தச்லோகத்தில் உயிரானவார்த்தை. கட்கிலியானவெம்பெருமான் ஆஸுர ப்ரக்ருதிகளிடையே வந்து அவர்களுடைய கட்புலனுக்கு இலக்காகித் திருவவதரித்தானென்பதை நினைக்கும்போதே ‘அந்தோ! இது என்ன சீலம்! குணமறிந்து உகக்கமாட்டாதே எதிரம்பு கோப்பதுஞ் செய்யாநின்ற அரக்கர் அசுரர்போன்ற மனிசரிடையே வந்து பிறக்கும்படியான இந்த சீல குணத்தை என்னவென்று சொல்லுவது?’ என்று உருகுகிறுர் கூரத் தாழ்வான். பிறந்தவாறும்! என்று சொல்லி ஆழ்வார் ஆறுமாஸம் மோஹித்திருக்கும்படியான பகவானது திருவவதாரத்தை நினைத்தவாறே ‘இது என்ன சீலகுணம்!’ என்று உருகவேண்டியது தவிர வேறில்லையே.

### அவதாரமென்ற சொல்லின் பொருள் விளக்கம்

அவதாரம் என்ற வடசொல்லுக்கு மேலிருந்து கீழேயிறங்குவது என்று பொருள். பரமபதமாகிய மேல்நிலத்திலிருந்து நிலவுலகமாகிய கீழ்நிலத்திற்கு வந்தானென்பதை அவதார சப்தார்த்தமாக நினைக்கவேண்டா. மேலான தனது நிலைமைகளை விட்டிட்டுக் கீழான நிலைமைகளை ஏற்றுக்கொண்டதே அவதாரமெனப்படுகிறது. ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதவன், எல்லாவிடங்களிலுமுளன், எல்லாக் காலத்திலுமுளன், எல்லாப்பொருள்களாகவுமுளன்—என்கிறவிவை பகவானுடைய மேலானநிலைமைகள். இத்தகைய நிலைமைகளை அறவே விட்டிட்டு இவற்றுக்கு எதிரிடையான தாழ்ந்த நிலைமைகளை ஏற்றுக் கொண்டல்லவோ பகவான் வந்து பிறந்தருளிற்று!

### உயர்ந்த நிலைமையும் தாழ்ந்த நிலைமையும்

ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதிருந்தவன் அரக்கரசுரர்போல்வார் கண்ணுக்கும் புலப்பட்டான்; எல்லாவிடங்களிலுமுளனானவன் ‘இப்போது அயோத்தியிலுளன், இப்போது சித்திரகூடத்திலுளன், இப்போது பஞ்சவடியிலுளன், இப்போது கிஷ்கிந்தையிலுளன், இப்போது கடற்கரையிலுளன்’ என்னும்படியாகி, ஓரிடத்திலிருக்கும் போது மற்றோரிடத்தில் இலனென்று நினைக்கும்படியாயினன். எக் காலத்திலுமுளனானவன் ஒரு குறிப்பிட்ட காலத்திலேயே இராமனாகவிருந்து மற்றைக் காலத்தில் இலனாயினன் என்று நினைக்கும்படி போயினன். *நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச் சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய்* *தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்* என்று ஆழ்வார்கள் அநுஸந்திக்கிறபடி எல்லாப்பொருள்களுமாகவுளனானவன் இராமன் என்கிறவொரு பெயர்க்குமாத்திரம் பொருளாகவிருந்தனன். ஆக இங்ஙனே உயர்ந்த நிலைமைகளைவிட்டுத் தாழ்ந்த நிலைமைகளை ஏறிட்டுக்கொண்டுவந்து பிறந்தவாறு என்னே! என்று ஈடுபடும்படியாக்குகின்றது சீலகுணம்.

